2nd April 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

possible, as a measure of retrenchment, they should abolish some of these District Munsiff Courts and wherever they are needed, they should establish them. That is also a very important thing.

I have not got much to say except to emphasize the fact that the Government must see that delays are avoided as much as possible and all pending cases are disposed of as early as possible.

With regard to the provision for amenities, many hon. Members have referred to it and I hope the Hon. Minister will look into that matter and provide all the amenities that are necessary to the litigant public.

### IV.—ANNOUNCEMENT BY THE DEPUTY SPEAKER.

DEPUTY SPEAKER : I have to announce to the House that the Hon. Speaker has fixed 10 a.m. on 3rd April 1958 as the last hour and date for the receipt of amendments to the Madras Maternity Benefit (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 1 of 1958) and the Madras Animal Preservation Bill, 1958 (L.C. Bill No. 2 of 1958) and 10 a.m. on 5th April 1958 for the receipt of amendments to the Madras Catering Establishments Bill, 1957.

Now the Hon. Minister will reply to the debate.

### III.—BUDGET FOR THE YEAR 1958–59—VOTING OF DEMANDS FOR GRANTS FOR THE YAER 1958–59—*cont.*

### (2) DEMAND XII—ADMINISTRATION OF JUSTICE.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி 1-13
சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்தில் கலந்துகொண்ட சில p.m.
அங்கத்தினர்கள் நீதி பரிபாலனத்தைப்பற்றி நாம் பெருமைப்படுவதற்கு இல்லை என்று சொன்னார்கள். ஊழல்கள் கூட நிறைந்து இருப்பதாகவும் ஒரு அங்கத்தினர் சொன்னார். ஆனால் நான் தற்புகழ்ச்சிக்காக சொல்லவில்லை. நம் ராஜ்யத்தில் உள்ள நீதி பரிபாலனத்தைப்பற்றி நாம் பெருமைப்படுவதற்கு இடம் உண்டு. அது மட்டும் அல்ல. அது சிறந்த வகையிலேயே நடந்து வருகிறது. அன்றொரு நாள் கனம் நிதி அமைச்சர் அவர்கள் கூறியது போல் இந்த ஒரு இலாகாவிலேதான் ஊழல் என்று சொல்வதற்கு இடம் இல்லாமல் இருக்கிறது. இந்த இலாகா சிறந்த வகையிலும், திறமையாகவும் நடந்து கொண்டு வருகிறது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

'சென்டரில்' கூட மற்ற எல்லா ராஜ்யத்தில் நடைபெறுகின்ற நீதி பரிபாலனத்தை அவர்கள் விமர்சனம் செய்யும்போது, ஒப்பிட்டுப் பார்க்கும் போது, நம்முடைய சென்னை ஹை கோர்ட்டில், தாமதம் இன்றி, துரிதமாகவே வழக்குகள் முடிக்கப்பட்டு வருகின்றன என்று அவர்கள் குறிப்பிட்டு இருக்கிறார்கள். ஆனாலும், இன்னும் எவ்வளவு தூரம் தாமதங்களை குறைக்க முடியுமோ அவ்வளவு தூரம் குறைப்பதற்கு கவனம் செலுத்த வேண்டும் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். இந்த விஷயத்தில் சென்னை ஹை கோர்ட் அவ்வப்போது கவனம் செலுத்திக் கொண்டு வருகிறது. தாமதத்தைக் குறைப்பதற்காகவும், செலவைக் குறைப்பதற்காகவும், அவர்கள் கீழே இருக்கும் கோர்ட்டுகளின் 'ஜூரிஸ்டிக்ஷனை' குறைக்கப்பட்டு வருகிறது. டிஸ்ட்ரிக்ட் கோர்ட், சப்-கோர்ட் இவைகளின் 'அப்பலேட் ஜூரிஸ்டிக்ஷனையும்' 'ஸ்மால்காஸ் ஜூரிஸ்டிக்ஷனையும்' அதிகப்படுத்தப்பட்டு வருகிறது. **Madras Civil and Village Courts (Amendment) Act, 1951** படி ஜில்லா முன்சீப் கோர்ட்டுகளில் 'ஒரிஜினல் சைடில்' **3,000** ரூபாய் என்று இருப்பதை **5,000** ரூபாயாக உயர்த்தப்பட்டு இருக்கிறது. 'ஸ்மால்காஸ் சைடில்' **300** ரூபாய் என்று இருப்பதை **500** ரூபாயாக உயர்த்தப்பட்டு இருக்கிறது. ஜில்லா கோர்ட்டுகளிலும் சப்-கோர்ட்டுகளிலும் 'ஸ்மால்காஸ் ஜூரிஸ்டிக்ஷனை' **1,000** ரூபாயிலிருந்து **2,000** ரூபாய்க்கு உயர்த்தப்பட்டிருக்கிறது. இதனால் மேல் கோர்ட்டுகளுக்கு போகாமல் இருக்கலாம். செலவும் குறையும்.